23rd September 1961]

இருக்கின்றவர்களை சீசன் தொழிலாளர்கள் என்று வேலையிலிருந்து நீக்கிவிட்டு புதிதாக தொழிலாளர்களை எடுக்கிருர்கள். ஆகவே இவ்வாறு வருடம் பூராவும் வேலை செய்கின்ற தொழிலாளர்களை நிரந்தரமாக்கி அவர்களுக்கு சட்டப்படியுள்ள கூலியை நிர்ணயம் செய்ய உத்தேசம் உண்டா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இது வேறு பிரச்னை, இதற்கு தனியாக கேள்வி போட வேண்டும்.

*Factories—Proto—type*

*1757 Q—SRI S. M. ANNAMALAI : கனம் உள்துறை அமைச்சர் தயவு செய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) நம் மாநிலத்தில் புரோடோடைப் தொழிற்சாலை ஏற்படுத்தும் உத்தேசம் உண்டா ?

(இ) அப்படியானுல், எங்கெங்கே ஆரம்பிக்கப்படும் ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (a) & (b) A proposal is reported to be under consideration of the Government of India.

SRI S. M. ANNAMALAI : இது தனியார் துறையில் ஆரம்பிக்கப் படுமா, அல்லது பொதுத் துறையில் ஆரம்பிக்கப்படுமா ? பொதுத் துறையில் என்றுல், இதற்கு எவ்வளவு ரூபாய் செலவாகும், இதில் ஏற்படும் செலவை மத்திய சர்க்கார் ஏதேனும் ஏற்றிருக்கிருர்களா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM ; இது பொதுத் துறையில் ஆரம்பிக்கப்படும். பிரஞ்சு அரசாங்கத்தின் ஒத்துழைப்போடு இது நிறை வேற்றப்படும்.

*Power-looms*

* 1758 Q.—SRI M. KALYANASUNDARAM : Will the Hon. the Minister for Electricity be pleased to state—

(a) whether power-looms are to be licensed in the State;

(b) if so, how many are to be permitted during 1961–62; and

(c) whether the Government have examined how far the introduction of power-looms would affect the hand-loom industry?

THE HON. SRI V. RAMAIAH : (a) & (b) It is proposed to introduce 2,500 power-loom in weavers' co-operative societies during the Third Five-Year Plan period. The number of power-looms to be installed during 1961–62 has not yet been decided; and

(c) Yes, Sir.

SRI M. KALYANASUNDARAM : கனம் அமைச்சர் அவர்கள் மூன்ருவது உப கேள்விக்கு சொன்ன பதிலில் ஆம் என்று சொன்னுர் கள். இந்த விசைத்தறிகளை நம்முடைய ராஜ்யத்தில் அதிகமாக அனு மதிப்பதினுல் ஏற்கனவே இருக்கக் கூடிய கைத்தறிகளுக்கு பாதகம் ஏற்படும் என்பதை அமைச்சர் அவர்கள் உணருகிருர்களா ?

THR HON. SRI V. RAMAIAH : இது ஒரு நீண்டகால பிரச்னை. இதைப்பற்றி ராஜ்யத்திலுள்ள எல்லா ஸ்தாபனங்களிடமும் கலந்து ஆலோசித்து பரிசீலனை செய்து, மூன்ருவது ஐந்தாண்டுத் திட்ட காலத் தில் 2,500 விசைத்தறிகளுக்கு அனுமதி கொடுப்பது என்று முடிவு செய்யப்பட்டிருக்கிறது.